5th February 1959]

SRI A. VEDARATHNAM : இதர மாகாணங்களில் இம்மாதிரி உற்பத்தியை அதிகரிப்பதற்கு என்று கலச பரிசு வழங்கப்பட்டு வருகிறது. அதுபோல் உற்பத்தியில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறவர்களுக்கு அம்மாதிரி பரிசு வழங்குவதற்கு இந்த அரசாங்கமும் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஒரு கலச பரிசு வழங்குவது என்பது முடியாத காரியம். அப்படி நிர்ணயம் செய்வதில் கொஞ்சம் சிரமமாக இருக்கும். இப்பொழுது ராஜ்யத்திற்கு ஒரு பரிசு அதாவது ரூ. 300 என்றும் வைக்கப்பட்டிருக்கிறது. ரீஜனல் முறையில் அதாவது மூன்று அல்லது நான்கு மாவட்டங்களுக்கு ஒரு பரிசு என்று வைக்கப்பட்டிருக்கிறது. பரிசு தொகை ரூ. 100. ஒவ்வொரு தாலுக்காவிற்கும் 50 ரூபாய் பெறுமானமுள்ள ஒரு பரிசு வைக்கப்பட்டிருக்கிறது. அதைப்போலவே பிர்க்காவுக்கும், வைக்கப்பட்டிருக்கிறது. அந்தந்த பிர்க்காவிற்கு என்று வைத்து எங்கே அதிகப்படியாக யார் உற்பத்தி செய்கிறார்களோ அவர்களுக்கு அந்தப் பரிசு வழங்கப்பட்டு வருகிறது.

SRI S. NAGARAJA MONIGAR : ஒருக்கால் இந்த மாதிரி பரிசு வழங்கப்படும்போது சுயமாகவே காவிரி பாசனம் தஞ்சை ஜில்லா இதிலிருந்து விலக்கப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒருக்காலும் இந்தப் பிரச்னை இந்த கேள்வியில் எழவில்லை.

SRI V. K. KOTHANDARAMAN : இப்பொழுது கொடுக்கப்படும் பரிசுகள் நில சொந்தக்காரர்களுக்குத்தான் கொடுக்கப்படுகிறது. அந்தந்த நிலங்களில் விவசாயம் செய்யக்கூடியவர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. ஆகவே உண்மையாகவே யார் விவசாயம் செய்கிறார்களோ அவர்களுக்கும் கொடுப்பதற்கு சர்க்கார் முயற்சிக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினருக்கு இது தெரிந்திருக்காது என்று நினைக்கிறேன். யார் உண்மையிலேயே உழுது விவசாயம் செய்கிறார்களோ அவர்களுக்குத்தான் பரிசு வழங்கப்பட்டு வருகிறது. அவர்கள் தான் இந்தப் பரிசுக்கு போட்டியிடவேண்டும்.

*District Publicity Officers*

* 3 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether persons, who were found unfit by the Madras Public Service Commission last year to hold the post of Public Relations Officer, have since been appointed by the Government as District Publicity Officers; and

(*b*) if so, the reasons for the same?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, one person, has been so appointed.

(*b*) The Officer in question possesses all the qualifications prescribed for the post, which are as follows :—

(1) A University Degree.

(2) Three years of journalistic experience.

(3) Age not more than 45 and not below 25 years at the time of appointment.

SRI K. SATTANATHA KARAYALAR: May I know the method and manner in which the particular post was filled? Was it advertised, were applications called for and how exactly was the post filled up?

THE HON. SRI C. SUBRAMANIAM: He was already working in the department and he was found to possess all the qualifications and the post was filled by promotion from the department.

SRI A. V. P. ASAITHAMBI: அரசாங்கத்தில் ஊழியம் பார்ப்பதாக இருந்தால் அவர் எந்த அரசியல் கட்சியிலும் இருக்கக்கூடாது என்று விதி இருக்கிறது. மாநில விளம்பர அதிகாரியாக இருப்பவர் காங்கிரஸ் கட்சியின் சார்பாக மேல்சபைக்கு அபேட்சா பத்திரம் தாக்கல் செய்தார் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? உத்யோகத்திற்கு வந்தபிறகு அவர் அந்தக் கட்சியை விட்டு விட்டாரா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இந்தக் கேள்வி இதில் எழவில்லை. ஆனால் இது ஒரு முக்கியமான கேள்வியாக இருப்பதால் அதற்கு பதில் சொல்கிறேன். யார் எந்தக் கட்சியைச் சேர்ந்தவராக இருந்தாலும் அரசாங்க உத்யோகத்திற்கு வந்தவுடன் அவர் அரசியல் கட்சியிலிருந்து விலகி விடவேண்டும் என்று விதி இருக்கிறது. அதன்படியே அவரும் விலகி இருக்கிறார்.

SRI K. VINAYAKAM: May I know on what grounds this incumbent was found unfit to hold the post of Public Relations Officer by the Public Service Commission? Does he possess all the qualifications to warrant his appointment to this office?

THE HON. SRI C. SUBRAMANIAM: I do not know on what grounds the Public Service Commission found him wanting. As a matter of fact, for this post of Public Relations Officer, there were about 19 applications and some of the applicants were interviewed, but none of them were found fit. Therefore, I really cannot say on what basis the Public Service Commission came to that conclusion.

* 4 Q.—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to appoint Publicity Officers to districts where there are no such officers at present?

THE HON. SRI C. SUBRAMANIAM: No.

SRI M. KALYANASUNDARAM: ஜில்லா விளம்பர அதிகாரிகளுக்கு என்ன தகுதிகள் வேண்டும் என்று நிர்ணயித்து இருக்கிறார்கள், அந்தப் பதவிக்கு நியமனம் செய்வதை என் சர்விஸ் கமிஷனுக்கு விடக்கூடாது என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: போன கேள்வியிலேயே இதைப்பற்றி சொல்லபப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு வேண்டியது

(1) A University Degree.

(2) Three years of journalistic experience.

(3) Age not more than 45 and not below 25 years at the time of appointment.